அந்தரங்கமானது



OLD

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2020

## 47 - இஸ்லாமிய நாகரிகம்

## பழைய பாடத்திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன

# பரீட்சகர்களுக்கான பொது அறிவுறுத்தல்கள்

## 47 - இஸ்லாமிய நாகரிகம்

1. நீங்கள் பொறுப்பேற்றுள்ள இப்பணி மாணவர்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் ஒன்றாதலால் மிகப் பொறுப்புணர்ச்சியோடு நிறைவேற்ற வேண்டியதொன்றாகும்.

2. இப்பணியில் நீங்கள் மிக நேர்மையாக நடக்க வேண்டுமென்பது பரீட்சைகள் திணைக்களத்தின் எதிர்பார்ப்பாகும்.

3. இப்பணி, மறுமையில் அல்லாஹ்விடத்தில் பதில் சொல்ல வேண்டிய ஒரு செயல் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வது உங்களது செயற்பாடுகளை நேர்மையாக முன்னெடுத்துச் செல்வதற்கு நிச்சயம் உதவும்.

4. **புள்ளித்திட்டம்**

   புள்ளித்திட்டம் பரீட்சகர்களிடையே ஒரு முகப்பாட்டை ஏற்படுத்துமாதலால், மாணவர்கள் நியாயமான முறையில் மதிப்பீடு செய்யப்படுவதற்காக, புள்ளித்திட்டத்தை முழுமையாகப் பின்பற்றுவது மிக அவசியமாகும்.

5. **அறிவுறுத்தல்கள்**

   பரீட்சைகள் திணைக்களம் முன்வைத்துள்ள அனைத்து அறிவுறுத்தல்களையும் பரீட்சகர்கள் முழுமையாகப் பின்பற்றுதல் அவசியமாகும்.

6. **விடைத்தாள் மதிப்பீடு**

   விடைத்தாள்களை மதிப்பிடும் பணியை ஆரம்பிக்க முன் ஒவ்வொரு வினாவுக்கும் மாணவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் விடை யாது என்பதை புள்ளித்திட்டத்தை நன்கு வாசித்து விளங்கிக் கொள்ளல் வேண்டும். மேலதிக விளக்கங்கள் தேவைப்படின் பிரதம கட்டுப்பாட்டாளர்/ பிரதம பரீட்சகரின் ஆலோசனையைப் பெற்றுக்கொள்ளலாம்.

7. **புள்ளி வழங்கும் ஒழுங்கு.**

   வினாப்பத்திரம் 01

   இதில் 50 வினாக்கள் உண்டு. ஒவ்வொரு வினாவுக்கும் 02 புள்ளிகள் வீதம் மொத்தம் 50 வினாக்களுக்கும் 100 புள்ளிகள் வழங்கப்படும்.

   வினாப்பத்திரம் 02

   இதில் பகுதி I பகுதி II என இரு பகுதிகள் உள்ளன. பகுதி I ஒவ்வொன்றும் ஐந்து பிரிவுகளைக் கொண்ட மூன்று வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி II ஒவ்வொன்றும் இரண்டு பிரிவுகளைக் கொண்ட ஐந்து வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி I ல் இரண்டு வினாக்களுக்கும், பகுதி II ல் மூன்று வினாக்களுக்கும் பரீட்சார்த்திகள் விடையளித்தல் வேண்டும். ஒவ்வொரு வினாவுக்கும் 20 புள்ளிகள் வழங்கப்படும்.

| புள்ளிகள் வழங்கப்படும் ஒழுங்கு | | |
|---|---|---|
| வினாப்பத்திரம் 01<br>50 வினாக்கள்,<br>தலா 02 புள்ளிகள் | 50 x 02 | 100 |
| வினாப்பத்திரம் 02<br>பகுதி I 02 வினாக்கள்<br>பகுதி II 03 வினாக்கள்<br>தலா 20 புள்ளிகள் | 02 x 20<br>03 x 20 | 40<br>60 |

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..........................................................................................

..........................................................................................

..........................................................................................





(ii) ..........................................................................................

..........................................................................................

..........................................................................................





(iii) ..........................................................................................

..........................................................................................

..........................................................................................





(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை O அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். பத்திரம் I ற்கான பல்தேர்வு வினாப்பத்திரம் மட்டும் இருப்பின் புள்ளிகள் இலக்கத்திலும் எழுத்திலும் பதியப்பட வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

ooo

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**
- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** ஜாஹிலிய்யாக் காலத்தில் க.்.பாவைப் பரிபாலித்தல் என்ற விடயம் எப்பெயர் கொண்டு அழைக்கப்பட்டது?
(1) ஸிகாயா (2) லிவா (3) ஹிஜாபா
(4) ரிபாதா (5) நத்வா

**2.** அபூ உஸ்மான் தலைமையிலான வர்த்தகத் தூதுக்குழு இலங்கையின் எந்த ஆட்சிக் காலப்பகுதியில் எகிப்துக்கு அனுப்பப்பட்டது?
(1) கம்பளை (2) யாப்பகுவ (3) அநுராதபுரம்
(4) பொலன்னறுவை (5) கண்டி

**3.** இஸ்லாம் மனிதன் மீது சுமத்தியுள்ள பொறுப்புக்களைச் சுட்டும் தொகுதி
(1) இபாதத், இமாரத், கிலாபத், ஆகும்
(2) தௌஹீத், ரிஸாலத், மஆத், ஆகும்
(3) ரிஸாலத், இஸ்மத், வகாலத், ஆகும்
(4) இபாதத், ஹிக்மத், நுஸ்ரத், ஆகும்
(5) இமாரத், இஜாரத், ஸிகாயத், ஆகும்

**4.** இமாம் அஹமத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் எழுதிய பிரபல்யமான பிக்ஹு நூல் யாது?
(1) மஸாஇல் ஸாலிஹ் (2) கிதாபுர் ரிஸாலா
(3) முகத்திமா (4) புதூகுல் ஐப்
(5) பிக்ஹுல் கபீர்

**5.** இலங்கையின் வெலிகமவில் அமைக்கப்பட்டுள்ள 'மத்ரஸதுல் பாரி' இன் ஸ்தாபகர் யார்?
(1) முபாரக் மௌலானா ஆவார்.
(2) ஷெய்கு முஸ்தபா வலியுல்லாஹ் ஆவார்.
(3) மாப்பிள்ளை லெவ்வை ஆலிம் ஆவார்.
(4) அல்-பாதிப் அல்-யமானி ஆவார்.
(5) கசாவத்தை ஆலிம் சாஹிப் ஆவார்.

6. ஹுதைபிய்யா உடன்படிக்கை கைச்சாத்தான வேளையில் மக்காவிலிருந்து மதீனாவுக்கு வந்த ஒரு ஸஹாபியை குறைஷியர் மீண்டும் மக்காவுக்கே அழைத்துச் சென்றனர். அந்த ஸஹாபி
(1) அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் (ரழி) ஆவார். (2) அபூ ஸஈத் அல் குத்ரி (ரழி) ஆவார்.
(3) அபூ ஜன்தல் (ரழி) ஆவார். (4) ஸஃது பின் அபீவக்காஸ் (ரழி) ஆவார்.
(5) மஆத் பின் ஜபல் (ரழி) ஆவார்.

7. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் அல்-குர்ஆன் விரிவுரையாளர்களுள் ஒருவராவார்
(2) தீனா இலாஹி என்ற சிந்தனையை மொகலாய மன்னன் பாபர் முன்வைத்துள்ளார்.
(3) மருத்துவ அறிஞர் இப்னு நபீஸ் குருதிச் சுற்றோட்டம் பற்றிக் கருத்துப்பரிமாறியுள்ளார்.
(4) அகபா உடன்படிக்கை நபியவர்களுக்கும் மக்காவாசிகளுக்குமிடையே இடம்பெற்றதாகும்.
(5) இஸ்லாமிய நாகரிகம் அரேபிய கலாசாரத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

8. பைதுல் மால் என்ற நிதி நிறுவனத்தை ஸ்தாபிப்பதற்கு கலீபா உமர் (ரழி) அவர்களுக்கு ஆலோசனை கூறியவர்,
(1) உஸ்மான் பின் ஹுனைப் (ரழி) ஆவார். (2) ஹுதைபதுல் யமானி (ரழி) ஆவார்.
(3) முஹம்மத் பின் மஸ்லமா (ரழி)ஆவார். (4) முஆத் பின் ஜபல் (ரழி) ஆவார்.
(5) வலீத் பின் ஹிஷாம் (ரழி) ஆவார்.

9. ஜமாஅதுத் தப்லீஃ அமைப்புடன் தொடர்புபடும் சொற்களை உள்ளடக்கிய தொகுதி யாது?
(1) கார்கூன், முரீத், முராகபா (2) முஹாஸபா, முர்ஷித், முகல்லித்
(3) கார்கூன், கஸ்து, மஹல்லா (4) உஸ்ரா, அவ்ராத், முனாஜாத்
(5) ஜம்இய்யா, நாஸிம், முராகபா

10. ஸாஹிபுஸ்ஸிர் என அழைக்கப்பட்ட நபித் தோழர்
(1) அலி (ரழி) ஆவார் (2) ஹுதைபதுல் யமானி (ரழி) ஆவார்
(3) முஆவியா (ரழி) ஆவார் (4) ஹஸன் (ரழி) ஆவார்
(5) அபூ மூஸா அல்-அஷ்அரி (ரழி) ஆவார்

11. பின்வருவோருள் அல்-குர்ஆனுக்கு விளக்கவுரை எழுதிய இருவரைச் சுட்டும் தொகுதியைத் தெரிவுசெய்க.
(1) பஹ்ருதீன் அர்ராஸி (ரஹ்) – புழைல் பின் இயாழ் (ரஹ்)
(2) இமாம் ஷாஹ்வலியுல்லாஹ் (ரஹ்) – இமாம் அப்துல் வஹாப் (ரஹ்)
(3) மௌலானா இல்யாஸ் (ரஹ்) – மௌலானா மௌதூதி (ரஹ்)
(4) இமாம் இப்னு தைமியா (ரஹ்) – இமாம் புஹாரி (ரஹ்)
(5) இமாம் இப்னு கஸீர் (ரஹ்) – ஷஹீத் செய்யத் குத்ப் (ரஹ்)

12. இலங்கை முஸ்லிம்களின் ஆரம்பக் கரையோரக் குடியேற்றங்களைக் காட்டும் சரியான தெரிவு
(1) திருகோணமலை, அம்பாந்தோட்டை, புத்தளம், மன்னார் என்பனவாகும்
(2) கொழும்பு, பேருவளை, அம்பாந்தோட்டை, பொத்துவில் என்பனவாகும்
(3) யாழ்ப்பாணம், திருகோணமலை, மட்டக்களப்பு, கற்பிட்டி என்பனவாகும்
(4) மன்னார், பேருவளை, கொழும்பு, புத்தளம் என்பனவாகும்
(5) பேருவளை, மட்டக்களப்பு, கற்பிட்டி, பொத்துவில் என்பனவாகும்

13. குடும்ப வாழ்வு பற்றி இஸ்லாம் கூறும் மிகச்சரியான கூற்று யாது?
(1) திருமணம் இன்றி ஆண், பெண் இணைந்து வாழவும் அனுமதி உண்டு
(2) திருமணம் ஒரு சடங்கு சம்பிரதாயமே அன்றி இபாதத் அல்ல
(3) ஒரு ஆண் எந்தப் பெண்ணையும் திருமணம் செய்ய முடியும்
(4) திருமணத்தில் ஈடுபடுவது ஆண், பெண் இரு பாலாரதும் தட்டிக்கழிக்க முடியாத கடமையாகும்
(5) திருமணம் ஒரு ஒப்பந்தம் மட்டுமன்றி இபாதத் ஒன்றும் ஆகும்

14. இஸ்லாமிய வரலாற்றில் யத்ரிப, மிஸ்ர் எனும் பெயர்களால் அழைக்கப்பட்ட இரண்டு இடங்களும் முறையே
(1) எதியோப்பியா, ஆர்மேனியா (2) மதீனா, எகிப்து (3) சவுதி அரேபியா, மதீனா
(4) ஈரான், எகிப்து (5) மதீனா, இந்தியா

**15.** பிரதான தரீக்காகளுள் காதிரிய்யா, ஷாதுலியா தரீக்காக்களின் ஸ்தாபகர்கள் முறையே
(1) இமாம் அப்துல் காதிர் (ரஹ்), இமாம் பஹாஉத்தீன் (ரஹ்)
(2) இமாம் நூருத்தீன் அஹ்மத் (ரஹ்), இமாம் அபூ இஸ்ஹாக் (ரஹ்)
(3) இமாம் அப்துல் காதிர் (ரஹ்), இமாம் நூருத்தீன் அஹமத் (ரஹ்)
(4) இமாம் பஹாஉத்தீன் (ரஹ்), இமாம் அப்துல் காதிர் (ரஹ்)
(5) இமாம் நூருத்தீன் அஹமத் (ரஹ்), இமாம் அப்துல் காதிர் (ரஹ்)

**16.** பின்வரும் கூற்றுகளுள் இஸ்லாமிய நாகரிகத்தின் சிறப்புப் பண்பாக அமையும் கூற்றைத் தெரிவுசெய்க.
(1) இம்மை வெற்றியை இலக்காகக் கொண்டுள்ளமை.
(2) முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் இடங்களுக்கு மட்டும் பொருத்தமாக அமைந்துள்ளமை.
(3) பகுத்தறிவுக் கோட்பாடுகளில் தங்கியுள்ளமை.
(4) இம்மை, மறுமை வெற்றியை இலக்காகக் கொண்டுள்ளமை.
(5) நெகிழாத் தன்மையுடைய, இறுக்கமான விதிகளை மாத்திரம் கொண்டுள்ளமை.

**17.** பின்வருவனவற்றுள் அபூ மூஸா அல்-அஷ்அரி (ரழி) அவர்கள் சம்பந்தமான சரியான கூற்று
(1) தூமதுல் ஜன்தல், சமாதானப் பேச்சுவார்த்தையின் போது அலி (ரழி) இன் பிரதிநிதியாகச் செயற்பட்டவர்.
(2) ஹுதைபிய்யா உடன்படிக்கையின் போது நபியவர்களின் எழுத்தாளராகப் பணியாற்றியவர்.
(3) அகபா உடன்படிக்கையின் போது மதீனாவாசிகளின் தலைவராக இருந்தவர்.
(4) எகிப்தை வெற்றிகொண்டு அதனை இஸ்லாமிய சாம்ராஜ்யத்தோடு இணைத்தவர்.
(5) கந்தக் யுத்தத்தின் போது நபியவர்களுடன் நிபுணத்துவ அறிவுரைகளைப் பரிமாறியவர்.

**18.** அரேபியரின் எக் கோத்திரத்தாரிடையே ஹர்புல் புஜ்ஜார் என்ற போராட்டம் இடம்பெற்றது?
(1) அவ்ஸ் - கஸ்ரஜ் (2) கினானா - கைஸ் (3) பனூபக்ர் - பனூநழ்ர்
(4) பனூஅதீ - பனூதைம் (5) பனூபக்ர் - பனூதக்லப்

**19.** கி.பி.1258 இல் பக்தாத் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த குழுவினர்
(1) சிலுவை வீரர்கள் ஆவர். (2) ஸ்பானியர்கள் ஆவர். (3) பர்மகீக்கள் ஆவர்.
(4) ஸபவியர்கள் ஆவர். (5) தாத்தாரியர்கள் ஆவர்.

**20.** கி.பி.17 ஆம் நூற்றாண்டுகளில் புழக்கத்தில் இருந்துள்ளதுடன் இன்றும் யூனானி மருத்துவ மாணவர்களால் பயன்படுத்தப்படும் நூல்
(1) அல்-ஹாவி ஆகும். (2) அல்-கானூன் ஆகும். (3) அல்-தப்ஸீர் ஆகும்.
(4) அத்-தஸ்ரீப் ஆகும். (5) கிதாபுத்தைஸீர் ஆகும்.

**21.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக
A - இஸ்லாம் இபாத்துகளோடு மட்டும் மட்டுப்படுத்திக் கொண்டமை இஸ்லாமிய நாகரிகத்தின் தேக்க நிலைக்குக் காரணமொன்றாக அமைந்தது.
B - தீனைப்பாதுகாத்தல், பரம்பரையை பாதுகாத்தல், செல்வத்தைப் பாதுகாத்தல் முதலியனவும் ஹாஜிய்யாத் என்ற பகுதியில் உள்ளடங்குகின்றன.
C - மதீனாவில் நபிகளார் காலத்தில் முஸ்லிம்கள், யூதர்கள், முஷ்ரிக்குகள் அனைவரும் கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டனர்.
D - நபியவர்களுக்கு அல்-அமீன், அஸ்-ஸாதிக் எனும் சிறப்புப் பெயர்கள் நுபுவ்வத்தின் பின்னரே கிடைக்கப்பெற்றன.
மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றுகளைக் கொண்ட தெரிவு யாது?
(1) A B (2) A C (3) B C (4) B D (5) C D

**22.** பின்வருவன அகீதா அடிப்படையில் அமைந்த சிந்தனைப் பிரிவுகளின் கருத்துக்கள் சிலவாகும்.
A - பெரும்பாவம் செய்தவனை அல்லாஹ், விரும்பினால் மன்னிப்பான் அல்லது தண்டிப்பான்
B - அல்லாஹ் உதாரணத்துக்கும், ஒப்புவமைக்கும் அப்பாற்பட்டவன் ஆவான்.
C - அல்லாஹ்வின் தாத்தும் ஸிபத்தும் வெவ்வேறானவை.
D - இமாம்கள் தவறு செய்வதை விட்டும் பாதுகாப்புப் பெற்றவர்கள்
E - விதிக்கப்பட்ட நேரத்தில் மறுமை நிகழும், அப்போது மனிதர்கள் கபுறுகளிலிருந்து எழுப்பப்படுவர்.
மேற்குறித்தவற்றுள் அஷ்-அரியாக்களின் கருத்துக்களைச் சுட்டும் தொகுதி யாது?
(1) A C E (2) A B D (3) B C D (4) B D E (5) C D E

**23.** இமாம்களான முஸ்லிம் (ரஹ்), அபூதாவூத் (ரஹ்) ஆகியோரின் பிறப்பிடங்களைச் சுட்டும் தொகுதி முறையே
(1) புஹாரா - ஸமர்க்கந்து.
(2) நைஸாபூர் - ஸிஜிஸ்தான்
(3) நைஸாபூர் - புஹாரா.
(4) கஸ்வின் - ஸமர்க்கந்து
(5) குராஸான் - ஸிஜிஸ்தான்.

**24.** மக்காவில் சிலை வணக்கத்தை அறிமுகப்படுத்தியவரின் பெயர் யாது?
(1) அம்ர் பின் ஹழ்ரமி (2) உபை பின் ஸலூல் (3) உமையா பின் ஹலப்
(4) அபூ ஜஹ்ல் (5) அம்ர் பின் லுஹை

**25.** மதீனா சாசன நிபந்தனைகளில் ஒன்று
(1) அஹ்லுல் பைத்தினரைப் பாதுகாப்பதாகும்.
(2) பத்துவருடங்களுக்கு யுத்தத்தை நிறுத்திக் கொள்வதாகும்.
(3) மதீனாவைவிட்டு வெளியேறாமல் இருப்பதாகும்.
(4) பெரும்பாவங்களைச் செய்யாமல் இருப்பதாகும்.
(5) சவால்களுக்கு அனைவரும் ஒன்றிணைந்து முகங் கொடுத்தலாகும்.

**26.** கிலாபத்தின் அமைதிக்குப் பங்கம் ஏற்படுத்தினார் எனக் காரணம் காட்டப்பட்டு கலீபா உஸ்மான் (ரழி) அவர்களால் நாடுகடத்தப்பட்ட ஸஹாபியின் பெயரும் கடத்தப்பட்ட இடமும் முறையே
(1) ஸ. ்.து இப்னு உபாதா (ரழி) - நஹ்ர்வான்
(2) அபூதர் அல் கிபாரி (ரழி) - ரபாதா
(3) ஜ. ்.பர் பின் அபீதாலிப் (ரழி) - ஹபஷா
(4) அம்மார் பின் யாஸிர் (ரழி) - கூபா
(5) முஆவியா பின் அபீ சுப்யான் (ரழி) - ஷாம்

**27.** இஸ்லாமிய நாகரிகத்தின் தோற்றத்துக்கு அடிப்படையாக அமைந்த அம்சங்களை மாத்திரம் சுட்டும் தொகுதியாக அமைவது
(1) ரிஸாலத் - ஸீரா - இமாமத்
(2) இபாதத் - கிலாபத் - இமாரத்
(3) தௌஹீத் - ரிஸாலத் - மஆத்
(4) இஸ்மத் - தஸ்கியத் - விலாயத்
(5) தௌஹீத் - ஸீரா - இமாரத்

**28.** அஹ்லுத் தௌஹீத் வல் அத்ல் என அழைக்கப்படுபவோர் யாவர்?
(1) மு. ்.தஸிலாக்கள் (2) ஏகத்துவவாதிகள் (3) நாஸ்திகர்கள்
(4) நபிகளாரின் குடும்பத்தினர் (5) மத்ஹபுகளைப் பின்பற்றுவோர்

**29.** முஸ்தபா கமாலினால் பதவி கவிழ்க்கப்பட்ட கடைசி உஸ்மானிய ஸுல்தான்
(1) ஸுல்தான் முராத் ஆவார். (2) ஸுல்தான் ஸலாஹுதீன் ஆவார்.
(3) ஸுல்தான் ஸலீம் ஆவார். (4) ஸுல்தான் அப்துல் ஹமீத் ஆவார்.
(5) ஸுல்தான் முஹம்மது அல்-பாதிஹ் ஆவார்.

**30.** இலங்கையின் பல பாகங்களிலும் ஸாஹிராக் கல்லூரியின் கிளைகள் உருவாவதற்குக் காரணமாக இருந்த பிரமுகர் யார்?
(1) கலாநிதி T.B ஜாயா (2) கலாநிதி பதியுதீன் மஹ்மூத்
(3) கலாநிதி A.M.A அஸீஸ் (4) டாக்டர் M.C.M கலீல்
(5) ஸேர் ராஸிக் பரீத்

**31.** பின்வருவனவற்றுள் சரியான கூற்றுகளைத் தெரிவுசெய்க

A - தப்ஸீர் எனும் சொல்லைப் போன்றே த:்வீல் எனும் சொல்லும் அல்குர்ஆனின் விளக்கவுரையுடன் தொடர்புபடுகின்றது.

B - நாடுகாண் பயணி கொலம்பஸ் இந்தியாவுக்கு வருவதற்கு வழிகாட்டியாக இருந்தவர் இப்னு மாஜித் ஆவார்

C - நபியவர்கள் காலத்தில், தப்ஸீர் கலை தனிக்கலையொன்றாக உருவாக்கம் பெற்றிருந்தது.

D - ஹிஜ்ரத்தின் பின் நபியவர்கள் முஹாஜிரீன்கள், அன்ஸாரீன்கள் இடையே சகோதரத்துவ உறவை ஏற்படுத்தினார்கள்.

(1) A B (2) A D (3) B C
(4) B D (5) C D

**32.** பின்வரும் "X" நிரலுக்கு ஏற்ப "Y" நிரலிலுள்ள சொற்களை சரியாக ஒழுங்குபடுத்தும்போது பொருத்தமாக அமையும் விடைத்தொகுதியினைத் தெரிவு செய்க.

| | X | Y |
|---|---|---|
| 1. | அல்-ஹாவி | A. அலி பின் ஸீனா |
| 2. | தாரீக் தமத்துன் | B. இப்னு அப்திரப்பிஹ் |
| 3. | இக்துல் பரீத் | C. ஜுர்ஜி ஸைதான் |
| 4. | அல்-கானூன் | D. அல்-மஜ்ஸீ |
| 5. | கிதாபுல் மாலிக் | E. ஸகரிய்யா அர்-ராஸி |

(1) A B E D C (2) A C B E D (3) C B E A D
(4) E B A D C (5) E C B A D

**33.** பின்வரும் அட்டவணையில் "X" பகுதி நூல்களின் பெயர்களையும் "Y" பகுதி நூலாசிரியர்களின் பெயர்களையும் கொண்டுள்ளன.

| | X | Y |
|---|---|---|
| 1. | கிதாபுல் மகாஸி | A இப்னு ஸஅத் |
| 2. | அல்-காமில் | B இப்னு கல்தூன் |
| 3. | அத்-தபகாத் | C இஸ்ஹாக் பின் யஸார் |
| 4. | அல்-முகத்திமா | D அல்-பலாதூரி |
| 5. | புதூஹுல் புல்தான் | E இப்னுல் அஸீர் |

மேற்குறித்தவற்றுள் X நிரலில் உள்ள நூல்களுக்கேற்ப ஏற்ப Y நிரலிலுள்ள நூலாசிரியர்களைச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது பொருத்தமாக அமையும் தெரிவு

(1) A E B C D (2) A B E D C (3) B A D E C
(4) C D B A E (5) D C B A E

**34.** பின்வரும் கூற்றுகளுள் மிகச் சரியான கூற்றுகளைத் தெரிவுசெய்க

A - "இலஞ்சம் வாங்குபவருக்கும் இலஞ்சம் கொடுப்பவருக்கும் அல்லாஹ்வின் சாபம் உண்டு" என்பது நபிமொழியொன்றாகும்.

B - "செல்வம் ஒரு சிலரின் கைகளில் தேங்கி நிற்காது அது மக்களிடையே சுழன்று வரும் ஒன்றாக இருக்கவேண்டும்" என்பது இஸ்லாத்தின் கருத்தாகும்

C - மதீனா சாசனம் மூலம் நபியவர்களின் தலைமைத்துவம் அங்கீகாரம் பெற்றதுடன் மதீனாவில் வாழ்ந்த அனைத்து மக்களதும் உரிமைகள் உறுதி செய்யப்பட்டன.

D - "குழந்தைகளைக் கொலை செய்வதில்லை" என்ற நிபந்தனை ஹுதைபிய்யா உடன்படிக்கையில் சேர்க்கப்பட்டிருந்தது.

(1) A B (2) A C (3) B C (4) B D (5) C D

**35.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - தப்ஸீர பித்திராயா தடை செய்யப்பட்ட தப்ஸீர் ஒன்றாகும்.
B - தப்ஸீர் பில் ம.்.ஸுர், தப்ஸீர் பில் ம.்.கூல், ஆகிய இரண்டும் தனித்தனியானவை.
C - தப்ஸீர் பீ ழிழாலில் குர்ஆனைத் தப்ஸீர் பில் ம.்.ஸுருக்கு உதாரணமாகக் காட்டமுடியும்.
D - தப்ஸீர் பில் அஸ்ர், மட்டுமே அங்கீகாரம் பெற்ற தப்ஸீர் ஆகும்
E - தப்ஸீர், த.்.வீல், இரண்டும் அல்-குர்ஆன் விளக்கவுரைகளைக் குறிக்கும்.

சரியான கூற்றைத் தெரிவு செய்க.

(1) A C (2) B D (3) B E (4) C D (5) D E

**36.** பின்வரும் ஆளுமைகளுள் தஜ்தீத் பணியின் முன்னோடியாக அமைந்த நபர்

(1) இமாம் அப்துல்லாஹ் பின் ஸுஹ்ரி (ரஹ்) ஆவார்.
(2) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) ஆவார்.
(3) மௌலானா ஷாஹ் வலியுல்லாஹ் (ரஹ்) ஆவார்.
(4) இமாம் புழைல் பின் இயாழ் (ரஹ்) ஆவார்.
(5) கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) ஆவார்.

**37.** பின்வருவனவற்றுள் அறபு எழுத்தணி வகைகளை மட்டும் குறிப்பிடும் சேர்மானத்தை தெரிவு செய்க

(1) அர்ரிகா, அல்-முத்ஆ, அல்-முஹக்கிக்
(2) நஸ்தலிக், தவ்கி, ஸீனத்
(3) கூபி, நஸ்கு, ஸுலுஸி
(4) அல்-முஹக்கிக், றைஹானி, மிஸ்மார்
(5) றைஹானி, மிஸ்மார், கத்பாபுரி

**38.** அல்-குர்ஆனை இனிய குரலில் ஓதியமைக்காக நபியவர்களால் பாராட்டப்பட்ட ஸஹாபியின் பெயர் யாது?

(1) அபூ மூஸா அல் அஷ்அரீ (ரழி)
(2) அபூ தர் அல் கிப்பாரி (ரழி)
(3) அபூ ஸஈத் அல் குத்ரி (ரழி)
(4) அபூ ஐயூப் அல் அன்ஸாரி (ரழி)
(5) அபூ உபைதா அல்- ஜர்ராஹ் (ரழி)

**39.** “ஆங்கிலக் கல்வியின் செல்வாக்கின் மூலமே முஸ்லிம்கள் உயர் சமூகமாக வளர்ச்சி அடைய முடியும்” என்ற கருத்தை முன்வைத்தவர்

(1) ஸேர் முஹம்மத் மாகான் மாகார் ஆவார். (2) கலாநிதி ட.பீ. ஜாயா ஆவார்.
(3) எம்.ஸீ. அப்துர் ரஹ்மான் ஆவார். (4) என்.டீ.எச். அப்துல் கபூர் ஆவார்.
(5) ஐ.எல்.எம். அப்துல் அஸீஸ் ஆவார்.

**40.** ரிபாஇய்யா தரீக்கா தோற்றம் பெற்ற இடம் யாது?

(1) ஜீலான் (2) புஹாரா (3) பக்தாத்
(4) டமஸ்கஸ் (5) பஸ்ரா

**41.** கலீபா உஸ்மான் (ரழி) க்கு எதிராகவும் அலி(ரழி) க்கு ஆதரவாகவும் கருத்துத் தெரிவித்து முஸ்லிம் உம்மாவில் பிரிவினையை ஏற்படுத்திய நபர்

(1) பஸ்ல் பின் ஸஹ்ல் ஆவார் (2) ஸப்வான் பின் உமையா ஆவார்
(3) உபை பின் ஸலூல் ஆவார் (4) அப்துல்லாஹ் பின் ஸபா ஆவார்
(5) வாஸில் பின் அதா ஆவார்

**42.** நுஸைரிகள் என அழைக்கப்படுவது

(1) ஷீஆக்களின் ஒரு பிரிவினரையாகும்
(2) மு.்.தஸிலாக்களின் ஒரு பிரிவினரையாகும்
(3) காரிஜீக்களின் ஒரு பிரிவினரையாகும்
(4) ஸ்பெயினின் முஸ்லிம் சிற்றரசுகளில் ஒன்றையாகும்
(5) இந்தியாவின் முஸ்லிம் சிற்றரசுகளில் ஒன்றையாகும்

**43.** ஹுதைபிய்யா உடன்படிக்கையைத் தொடர்ந்து உரோம மன்னருக்கு நபிகளாரின் கடிதத்தை எடுத்துச் சென்ற ஸஹாபி

(1) அப்துல்லாஹ் பின் ஜஹ்ஷ் (ரழி) ஆவார்.
(2) ஸைத் பின் தாபித் (ரழி) ஆவார்.
(3) ஹாரிஸ் பின் உமைர் (ரழி) ஆவார்.
(4) அபூ ஹுஸைமா அல்-அன்ஸாரி (ரழி) ஆவார்.
(5) ஸஃத் பின் உபாதா (ரழி) ஆவார்.

**44.** பின்வருவனவற்றுள் ஒத்த கருத்தைச் சுட்டும் சொற்றொடரைத் தெரிவுசெய்க

(1) அத்-துன்யா வல்-ஆகிரா
(2) அத்-தௌபா வல்-இஸ்திஃபார்
(3) அல்-முஹ்கம் வல்-முதஷாபிஃ
(4) அல்-மக்பூல் வல்-மர்தூத்
(5) அத்-தௌஹீத் வஷ்-ஷிர்க்

**45.** மொகலாய ஆட்சியாளர் ஔரங்கஸீப் அவர்களின் காலத்தில் தொகுக்கப்பட்ட இஸ்லாமிய சட்ட நூல்

(1) பதாவா இப்னு தைமியா
(2) தொழுகை அடவு
(3) பத்ஹுத் தயான்
(4) பதாவா முஆஸரா
(5) பதாவா ஆலம் கீரி

- **46** தொடக்கம் **50** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | சரியானது | பிழையானது |
| (3) | பிழையானது | பிழையானது |
| (4) | பிழையானது | சரியானது |
| (5) | சரியானது | சரியானதாக இருப்பதுடன் முதல் கூற்றை மேலும் விபரிக்கின்றது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **46.** | பானத்ஸுஆத் எனும் பாடலைப் பாடிய கவிஞர் ஸுஹைல், நபிகளாரின் பாராட்டுக்களைப் பெற்ற ஒருவராவார். | இஜ்மாவை மேற்கொள்ள ஒன்றுக்கு மேற்பட்ட முஜ்தஹித்கள் இருக்க வேண்டுமென்பது ஒரு நியதியாகும். |
| **47.** | இமாம் ஜஃபர் பின் ஸாதிகின் புதல்வர் இமாம் இஸ்மாயீல் என்பவரைப் பின்பற்றுவோர் இஸ்மாயீலிய்யாக்கள் ஆவர். | அஹ்மரினால் ஸ்பெனிலுள்ள அல்-ஹம்ரா மாளிகை நிர்மாணிக்கப்பட்டுள்ளது. |
| **48.** | அமர்வதற்கு இயைந்து கொடுக்கக்கூடிய கதிரை போன்றதே கருத்து வேறுபாடு என்று முஸ்தபா அஹமத் ஸர்க்கா குறிப்பிட்டுள்ளார்கள். | கலீபா முஆவியா (ரழி) அவர்களால் ஹதீஸ்களைத் திரட்டும் பணியில் இமாம் ஸுஹ்ரி (ரஹ்) அவர்கள் ஈடுபடுத்தப்பட்டார்கள். |
| **49.** | நன்மையை ஏவித் தீமையைத் தடுக்கும் விடயத்தில் ஆண்களும் பெண்களும் சமபங்கு உடையவர்கள் என்பதே இஸ்லாத்தின் கருத்தாகும். | தஜ்தீத் பணிகள் கூட்டாகவும் தனியாகவும் இடம் பெற முடியும் |
| **50.** | அலி (ரழி) அவர்கள் நஜ்ரான் பிரதேச கிறிஸ்தவர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையே நஜ்ரான் ஒப்பந்தம் என அழைக்கப்படுகிறது. | ஆயிஷா (ரழி) ஹப்ஸா (ரழி) இருவரும் முறையே கலீபாக்களான அபூபக்கர் (ரழி) உமர் (ரழி) ஆகியோரின் புதல்விகளாவர். |

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2020

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்

විෂය අංකය பாட இலக்கம் **47** විෂයය பாடம் **இஸ்லாமிய நாகரிகம்**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 3 | 11. | 5 | 21. | 2 | 31. | 2 | 41. | 4 |
| 02. | 2 | 12. | 4 | 22. | 2 | 32. | 5 | 42. | 1 |
| 03. | 1 | 13. | 5 | 23. | 2 | 33. | All | 43. | 3 |
| 04. | 1 | 14. | 2 | 24. | 5 | 34. | 1,2,3 | 44. | 2 |
| 05. | 3 | 15. | 3 | 25. | 5 | 35. | 3 | 45. | 5 |
| 06. | 3 | 16. | 4 | 26. | 2 | 36. | 5 | 46. | 1 |
| 07. | 3 | 17. | 1 | 27. | 3 | 37. | 3 | 47. | 1 |
| 08. | 5 | 18. | 2 | 28. | 1 | 38. | 1 | 48. | 2 |
| 09. | 3 | 19. | 5 | 29. | All | 39. | 2 | 49. | 1 |
| 10. | 2 | 20. | 2 | 30. | 1 | 40. | 5 | 50. | 4 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය II
இஸ்லாமிய நாகரிகம் II
Islamic Civilization II

47 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள்:**

பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) மதீனா ஹிஜ்ரத் திட்டமிடப்பட்ட ஒன்று என்பதற்கான **இரண்டு** சான்றுகளை முன்வைக்குக.

(ii) உஸ்மான் (ரழி) அவர்கள் கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்ட முறையை விபரிக்குக.

(iii) கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் ஆட்சியின் சிறப்புக்கள் **நான்கினை** விளக்குக.

(iv) உரோம, பாரசீக சாம்ராஜ்யங்கள் முஸ்லிம்களால் வெற்றிகொள்ளப்பட ஏதுவாயமைந்த காரணிகள் **நான்கினைப்** பரிசீலனை செய்க.

(v) இஸ்லாமிய நாகரிகம், ஏனைய நாகரிகங்களிலிருந்து வேறுபடும் **நான்கு** அம்சங்களை விளக்குக.

(4× 5 =20 புள்ளிகள்)

**2.** (i) நபி (ஸல்) அவர்கள் தனது த.'.வா பணியில் எதிர்கொண்ட சவால்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(ii) அகபா உடன்படிக்கைகளில் உள்வாங்கப்பட்டிருந்த நிபந்தனைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(iii) கோத்திர முரண்பாடுகள் கிலாபத்தில் ஏற்படுத்திய பாதிப்புக்கள் **இரண்டைப்** பரிசீலனை செய்க.

(iv) உமையா ஆட்சியின் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்த **நான்கு** விடயங்களை விபரிக்குக.

(v) அப்பாஸிய கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதில் கலீபா மன்ஸூரின் பங்களிப்பை விளக்குக

(4×5 =20 புள்ளிகள்)

**3.** (i) நபியவர்கள் காலத்தில் ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்ட முறைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(ii) "இஜ்திஹாத், சட்ட உருவாக்கத்துக்குத் துணை செய்யும் காரணி ஒன்றாகும்" என்பதற்கான குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் **ஒவ்வொன்றைக்** குறிப்பிடுக.

(iii) இஜ்மா அக்ஸரிய்யாவை ஏற்றுக் கொள்ளும் இமாம்கள் முன்வைக்கும் ஆதாரங்கள் **இரண்டை** விபரிக்குக.

(iv) இலங்கையின் ஆரம்பகால முஸ்லிம் குடியேற்றங்கள் கரையோரங்களில் தோற்றம் பெற்றமைக்கான காரணங்கள் **நான்கினை** விபரிக்குக.

(v) இலங்கை முஸ்லிம்களின் மறுமலர்ச்சியில் கலாநிதி T.B. ஜாயா அவர்களின் பணிகளை மதிப்பிடுக.

(4× 5 =20 புள்ளிகள்)

## பகுதி II

4. (i) நபி அவர்களது காலத்தில் அல்-குர்ஆனைப் பாதுகாப்பதில் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் பற்றி பரிசீலிக்குக.

(ii) இஸ்லாமிய உம்மத் உருவாக்கத்தில் அல்-குர்ஆனின் வகிபாகத்தைத் தெளிவுபடுத்துக.

(10× 2 =20 புள்ளிகள்)

5. (i) பிரபஞ்சம், மனிதன் பற்றிய இஸ்லாத்தின் கருத்தைச் சுருக்கமாக விளக்குக.

(ii) இஸ்லாமிய சமூகம் ஜாஹிலிய்யா சமூகத்திலிருந்து வேறுபடும் விதத்தைத் தெளிவுபடுத்துக.

(10× 2 =20 புள்ளிகள்)

6. (i) சமூக நல்லிணக்கத்துக்கான இஸ்லாத்தின் வழிகாட்டல்களை ஆதாரபூர்வமாகத் தெளிவுபடுத்துக.

(ii) இலங்கை முஸ்லிம்கள் கண்டி இராச்சியத்தில் வழங்கிய நிர்வாகச் சேவைகளை விபரிக்குக.

(10× 2 =20 புள்ளிகள்)

7. (i) அலி இப்னு ஸீனா மருத்துவத்துறை வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்புகளை விபரிக்குக.

(ii) வரலாற்றுத்துறையில் முஸ்லிம்கள் ஆர்வம் காட்டியமைக்கான காரணிகளைக் குறிப்பிட்டு, அதன் வளர்ச்சியில் அவர்களின் பங்களிப்பை மதிப்பீடு செய்க.

(10× 2 =20 புள்ளிகள்)

8. (i) 'ஷீஆ'ப் பிரிவினரின் 'இஸ்மத்' 'இமாமத்' கோட்பாடுகளை விரிவாகப் பரிசீலிக்குக.

(ii) மு.ஃ.தஸிலா, அஷ்-அரிய்யா சிந்தனைப்பிரிவுகளுக்கிடையே தென்படும் கருத்துவேறுபாடுகளை விபரிக்குக.

(10×2 =20 புள்ளிகள்)

* * *

# பகுதி I

**வினா இல: (01)**

**1.** (i) மதீனா ஹிஜ்ரத் திட்டமிடப்பட்ட ஒன்று என்பதற்கான **இரண்டு** சான்றுகளை முன்வைக்குக.

1. அபூபக்ர் (றழி) அவர்களுடனான நபியவர்களின் கலந்துயைாடல்
2. பயண ஏற்பாடு
3. ஸஹாபாக்கள் பலர் நபியவர்களுக்கு முன்னதாகவே மதீனாவிற்கு அனுப்பி வைக்கப்பட்டமை
4. அகபா உடன்படிக்கையும் முஸ்அப் பின் உமைர் (றழி) மதீனாவிற்கு அனுப்பி வைக்கப்பட்டமையும்
5. அல்லாஹ்வின் கட்டளையை எதிர்பார்த்திருந்தமை

**(04 புள்ளிகள்)**

(ii) உஸ்மான் (ரழி) அவர்கள் கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்ட முறையை விபரிக்குக.

**குழுத் தெரிவு**

உமர் (றழி) தனக்குப் பிறகு கலீபாவாக ஒருவரை தெரிவு செய்யும் நோக்கில் ஆறு ஸஹாபாக்களைக் கொண்ட ஒரு குழுவினரை நியமித்து அவர்களிலிருந்து பொருத்தமான ஒருவரைக் கலீபாவாகத் தெரிவு செய்யுமாறு கேட்டுக் கொண்டமை

**(04 புள்ளிகள்)**

(iii) கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் ஆட்சியின் சிறப்புக்கள் **நான்கினை** விளக்குக.

- சூறா அடிப்படையில் அமைந்த ஆட்சி
- அல்குர்ஆன் - அஸ்ஸுன்னா வழிகாட்டல்கள் முதலிடம் பெறல்
- சமூக மேம்பாடும் பொருளதாரச் செழிப்பும் ஏற்படல்
- பைத்துல் மால் பொது உடமையாகப் பயன்படுத்தப்படல்
- சிறுபான்மையோர் உரிமைகள் பாதுகாக்கப்படல்
- தகுதியும் பேணுதலும் உடையவர்கள் உயர் பதவிகளில் அமர்த்தப்படல்
- சன்மார்கக் கலைகள் பாதுகாக்கப்படவும் முன்னிலைப்படுத்தவும் நடவடிக்கை எடுக்கப்படல்
  இவை போன்றன

**(04 புள்ளிகள்)**

(iv) உரோம, பாரசீக சாம்ராஜ்யங்கள் முஸ்லிம்களால் வெற்றிகொள்ளப்பட ஏதுவாயமைந்த காரணிகள் நான்கினைப் பரிசீலனை செய்க.

- உரோம பாரசீக பிரதேசங்களில் காணப்பட்ட ஒழுங்கற்ற தன்மையும் முரண்பாடுகளும்
- முஸ்லிம் தரப்பு தலைமைத்துவமும் கட்டுப்பாடான இராணுவப் போராட்டமும்
- உரோம, பாரஸீக பிரதேசங்களில் துன்புறுத்தல்களுக்குட்படுத்தப்பட்ட மக்கள், முஸ்லிம்களின் வருகையை எதிர்பார்த்திருந்தமை
- அல்லாஹ்வின் உதவியும் ஆன்மீகப் பலமும்
  (வெற்றி- தோல்வி, இரண்டையும் வெற்றியாகவே கருதியமை)
- வெற்றி பற்றிய முன்னறிவிப்புக்களும் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் முஸ்லிம்கள் போராடியமையும்.

**(04 புள்ளிகள்)**

(v) இஸ்லாமிய நாகரிகம், ஏனைய நாகரிகங்களிலிருந்து வேறுபடும் **நான்கு** அம்சங்களை விளக்குக.

1. ஏக இறை கோட்பாட்டைக் கொண்டது
2. தெய்வீக தன்மை வாய்ந்தது. - (ரப்பானிய்யத்)
3. பரிபூரணத்துவமானதாக உள்ளது - (ஷுமூலிய்யத்)
4. சர்வதேசமயமானது - (ஆலமிய்யத்)
5. நடைமுறை சாத்தியமானது (வாக்கிஇய்யத்)
6. பொதுத் தன்மை வாய்ந்தது (உமூமிய்யத்)
7. சமநிலைத்தன்மை கொண்டது (ஆன்மீகம், லௌகீகம்)

**(04 புள்ளிகள்)**

(4 × 5 = 20 புள்ளிகள்)

**வினா இல: (02)**

**2.** (i) நபி (ஸல்) அவர்கள் தனது த.்.வா பணியில் எதிர்கொண்ட சவால்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- உளரீதியான சவால்கள்
- உடலியல் சவால்கள்
- பேரம் பேசல் (செல்வம், அதிகாரம்)
- சமூகப் பகிஷ்கரிப்பு (பொருளாதாரத் தடை, தொடர்பாடல் தடை)
- இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டோர் மீது எதிரிகள் மேற்கொண்ட வன்முறைகள்

**(04 புள்ளிகள்)**

(ii) அகபா உடன்படிக்கைகளில் உள்வாங்கப்பட்டிருந்த நிபந்தனைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- அல்லாஹ்வை மட்டுமே வணங்குவோம், இணைவைக்கமாட்டோம்
- திருட மாட்டோம், விபச்சாரம் செய்யமாட்டோம்
- குழந்தைகளைக் கொலை செய்யமாட்டோம்
- உயிரிலும் மேலாக நபி அவர்களைப் பாதுகாப்போம்
- செல்வ நிலையிலும் வறுமை நிலையிலும் மார்க்க மேம்பாட்டுக்காக செலவு செய்வோம்

சூரா மும்தஹினாவின 12ம் வசனத்தை மையமாகக் கொண்டு இதனை எடுத்துக் காட்ட முடியும்.

**(04 புள்ளிகள்)**

(iii) கோத்திர முரண்பாடுகள் கிலாபத்தில் ஏற்படுத்திய பாதிப்புக்கள் **இரண்டைப்** பரிசீலனை செய்க.

- முஸ்லிம் உம்மத் பலவீனமடைந்தமையும் அவர்களிடையே ஐக்கியம் சிதைந்தமையும் முஸ்லிம்களிடையே கோத்திர ஆட்சி மரபுகள் தோன்றியமையும்
- முஸ்லிம் சாம்ராஜ்ய அலகு பலவீமனடைந்தமை
- முஸ்லிம்களிடையே உட்சண்டை, சச்சரவு ஏற்பட்டமையும் உயிரிழப்பு சொத்திழப்பு ஏற்பட்டமையும்
- பொதுமைப்படுத்தப்பட்ட ஸ்தீரமான அரசு உருவாவதற்கு தடை ஏற்பட்டமையும்

**(04 புள்ளிகள்)**

(iv) உமையா ஆட்சியின் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்த **நான்கு** விடயங்களை விபரிக்குக.

- இஸ்லாமிய வழிகாட்டல்கள் புறக்கணிக்கப்பட்டமை
- உமையா ஆட்சியாளர்களின் ஆடம்பர வாழ்வு
- கோத்திர உணர்வு மேலோங்கியமையும் ஐக்கியம் சீர் குலைந்தமையும்
- பிற்பட்ட கால கலீபாக்களின் திறமையின்மை
- பைதுல்மால் துஷ்பிரயோகம்
- அப்பாசியர்களின் எழுச்சியும், திட்டமிட்ட பிரச்சாரமும்
- உமையாக்கள் மீதான மக்கள் அதிருப்தியும் மக்கள் மாற்றத்தை எதிர்பார்த்தமையும்

**(04 புள்ளிகள்)**

(v) அப்பாஸிய கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதில் கலீபா மன்ஸூரின் பங்களிப்பை விளக்குக

- அப்பாசிய ஆட்சிக்கெதிராக வர முடியும் என இனங்காணப்பட்டவர்களை அழித்தொழித்தமை (அபூ முஸ்லிம் அல் குராசானி,அப்துல்லா பின் அலி)
- ஆட்சிக்குப் பாதுகாப்பானதாக அமையும் எனக்கருதி தலை நகரை பக்தாதுக்கு மாற்றியமை
- நிர்வாகச் சீராக்கம்
- தகுதிக்கும் திறமைக்கும் முக்கியத்துவம் கொடுத்து பதவிகள் வழங்கியமை
- இராணுவக் கட்டமைப்பை ஒழுங்குபடுத்தியமை

இவற்றின் மூலமாக அப்பாஸிய கிலாபத்தின் உண்மையான நிர்மாணி என பெயர் பெற்றமையை எடுத்துக் காட்டல்

**(04 புள்ளிகள்)**
(4 × 5 = 20 புள்ளிகள்)

**வினா இல: (03)**

**3.** (i) நபியவர்கள் காலத்தில் ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்ட முறைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

1. மனனமிடல் மூலம்
2. எழுத்து வடிவு மூலம்
3. நடைமுறைப்படுத்தல் மூலம்
4. கற்றல் – கற்பித்தல் மூலம்
5. மனனத்தைப் பரீட்சித்தல் மூலம்

**(04 புள்ளிகள்)**

(ii) "இஜ்திஹாத், சட்ட உருவாக்கத்துக்குத் துணை செய்யும் காரணி ஒன்றாகும்" என்பதற்கான குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் **ஒவ்வொன்றைக்** குறிப்பிடுக.

1. அல்லாஹ் உமக்கு கற்றுத் தந்ததன் பிரகாரம் மக்களுக்கு மத்தியில் நீதியளிப்பதற்காக சத்தியத்தைக் கொண்டுள்ள மார்க்கத்தை நாமே உம்மீது நிச்சமயாக இறக்கி வைத்தோம்
2. மேலும் அமைதியோ அல்லது பீதியோ பற்றிய ஏதேனும் ஒரு செயற்பாடு.....
3. ஒரு நீதிபதி தனது இஜ்திஹாதைப் பயன்படுத்தி எடுக்கும் தீர்வு பற்றிய ஹதீஸ்
4. பனூ குறைழா சம்பவம் , முஆத் பின் ஜபல் சம்பவம்
(குர்ஆன் வசனங்கள் அறபு மொழியில் எழுதப்பட்டிருக்க முடியும்.

**(04 புள்ளிகள்)**

(iii) இஜ்மா அக்ஸரிய்யாவை ஏற்றுக் கொள்ளும் இமாம்கள் முன்வைக்கும் ஆதாரங்கள் **இரண்டை** விபரிக்குக.

1. இஜ்மா அக்ஸரிய்யாவை ஏற்றுக்கொள்ளும் விடயத்தில் இமாம்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.
2. இமாம் இப்னு ஜரீர் அத்தபரி, அபூபக்கர் ராஸி, அஹ்மத் இப்னு ஹன்பல் முதலானோர் இதனை ஆதாரமாக ஏற்றுக் கொள்வர்
3. "எனது உம்மத்தினர் வழிகேட்டில் ஒன்றுபடமாட்டார்கள்" என்ற ஹதீஸ்
4. நீங்கள் கருத்து வேறுபாடுகளைக் கண்டால் பெரும்பான்மையோரது கருத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் (ஹதீஸ்)
5. தனித்துச் செல்வதை எச்சரிக்கிறேன் (ஹதீஸ்)
6. அபூ பக்ர் (ரழி) கலீபாகத் தெரிவான முறை
7. குறிப்பிட்ட ஒரு சாராரின் கருத்து முரண்பாட்டைக் கருத்திற் கொண்டு செயற்பட்டால் இஜ்மா எந்த வகையிலும் சாத்தியமாக மாட்டாது (தர்க்க ரீதியான கருத்து)

**(04 புள்ளிகள்)**

(iv) இலங்கையின் ஆரம்பகால முஸ்லிம் குடியேற்றங்கள் கரையோரங்களில் தோற்றம் பெற்றமைக்கான காரணங்கள் **நான்கினை** விபரிக்குக.

1. இயற்கைத் துறைமுக வசதிகள் காணப்பட்டமை
2. பருவ காலங்களில் பொருட்களைக் களஞ்சியப்படுத்துவதற்கான வசதிகள் காணப்பட்டமை
3. கடற் கொள்ளை மற்றும் எதிரிகளின் நடமாட்டத்தைக் கண்காணிக்க வேண்டிய தேவை ஏற்பட்டமை.
4. இறக்குமதிப் பண்டங்களை விநியோகிக்கவும் ஏற்றமதிப் பொருட்களை சேமிக்கவும் கரையோரங்கள் வாய்ப்பாக அமைந்தமை
5. கரையோரங்களில் தங்கியிருந்த முஸ்லிம் வர்த்தகர்கள் அங்கு வாழ்ந்த சுதேசப் பெண்களை மணம் முடித்தமை.

**(04 புள்ளிகள்)**

(v) இலங்கை முஸ்லிம்களின் மறுமலர்ச்சியில் கலாநிதி T.B. ஜாயா அவர்களின் பணிகளை மதிப்பிடுக.

- 1920 களில் கொழும்பு ஸாஹிறாக் கல்லூரியின் அதிபராகக் கடமையாற்றியமை
- ஸாஹிறாக் கல்லூரியில் மாற்றங்களை ஏற்படுத்தியமை
- ஸாஹிறாக் கல்லூரியின் கிளைகளை உருவாக்கியமை
- டொனமூர் அறிக்கை பற்றிய மகஜர் சமர்ப்பித்தமை
- செனட் சபை உறுப்பினராக செயற்பட்டமை
- பாராளுமன்ற உறுப்பினர், அமைச்சுப் பணிகள்
- தேசிய விடுதலை சுதந்திரப் போராட்டங்களில் பிற சமூகங்களுடன் இணைந்து பணியாற்றியமை
- ஸஊதி அரேபியாவில் இலங்கை ஹாஜிகளின் நலன் கருதி சிலோன் ஹவ்ஸை உருவாக்கியமை
- நெஷனல் கோங்கிரஸின் உப தலைவராக இருந்தமை
- பாகிஸ்தானில் இலங்கையின் தூதுவராகப் பணியாற்றியமை

**(04 புள்ளிகள்)**

(4 × 5 = 20 புள்ளிகள்)

# பகுதி II

**வினா இல: (04)**

4. (i) நபி அவர்களது காலத்தில் அல்-குர்ஆனைப் பாதுகாப்பதில் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் பற்றி பரிசீலிக்குக.

- அல் குர்ஆன் பாதுகாப்பின் முதற்கட்டமாக நபியவர்கள் காலம் உள்ளமை
- அல்குர்ஆன் வசனங்களை ஓதுதல்
- மனனமிடல்
- பகுதி பகுதியாக அருளப்படல்
- எழுத்துப்பதிவு – (குத்தாபுல் வஹி)
- கற்றல் கற்பித்தல்
- நடைமுறைப்படுத்தல் – (தொழுகையில் ஓதல், பின்பற்றல்)
- ஒவ்வொரு ரமழானிலும் அது வரை அருளப்பட்ட வசனங்கள் மீட்டப்பட்டமை.
- இறுதி ரமழானில் ஜிப்ரயீல் ( அலை ) மூலம் முழுக் குர்ஆனும் ஓதிக்காண்பிக்கப்பட்டமை (ஸைத் பின் தாபித் (ரழி) அவர்களின் பிரசன்னம்)

**(10 புள்ளிகள்)**

(ii) இஸ்லாமிய உம்மத் உருவாக்கத்தில் அல்-குர்ஆனின் வகிபாகத்தைத் தெளிவுபடுத்துக.

- தனிமனிதன், குடும்பம், சமூகம் பற்றிய இஸ்லாத்தின் கருத்துக்களை எடுத்துக்காட்டல்
- ஸாலிஹான குடும்பம் – திருமணம் பற்றிய விடயம்
- அல் குர்ஆனின் பொதுவான வழிகாட்டல்கள் சமூகம் பற்றியதாகவும் அதனை முன்னிலைப்படுத்தியதாகவும் உள்ளமை (யாஅய்யுஹன்னாஸ் – அல்லதீன ஆமனூ)
- ஒழுக்கம், கட்டுப்பாடு, முகாமைத்துவம், சட்டம் உள்ளடங்கலாக அடிப்படை விதிகளை அல் குர்ஆன் பொதிந்துள்ளமை
- ஒவ்வொருவரதும் பொறுப்புக்கள் வரையறுத்துக் கூறப்பட்டுள்ளமை
- இஸ்லாமிய சமூகம் ஒரு கொள்கை வழி சமூகமாக உள்ளமை
- தலைமைத்துவக் கட்டுப்பாடு வலியுறுத்தப்பட்டுள்ளமை
- ஹலால் – ஹராம் பேணப்படல்
- தக்வா உடன் வாழ்க்கையை அமைத்தல்

**(10 புள்ளிகள்)**

(10 × 2 = 20 புள்ளிகள்)

**வினா இல: (05)**

**5.** (i) பிரபஞ்சம், மனிதன் பற்றிய இஸ்லாத்தின் கருத்தைச் சுருக்கமாக விளக்குக.

**பிரபஞ்சம்**

- பிரபஞ்சம் பற்றிய அறிமுகம்
- பிரபஞ்சம் தோற்றம் (அல்ஹாலிக், அல் பாரி)
- பிரபஞ்சம் அல்லாஹ்வுக்கு உரியது, அவனே அதற்கு சொந்தக்காரன் (மாலிகுல் முல்க்)
- பிரபஞ்சம், அல்லாஹ் விதித்த நியதிகளின் படி செயற்படுகின்றமை
- பிரபஞ்சம் ஒரு இலக்கின் அடிப்படையில் படைக்கப்பட்டுள்ளமை
- பிரபஞ்சம் அதில் உள்ளவை அனைத்தும் மனிதனுக்காக படைக்கப்பட்டுள்ளமை
- பிரபஞ்சம் நிலையான ஒன்றல்ல அது அழியக் கூடியது

**மனிதன்**

- மனிதன் பற்றிய அறிமுகம்
- மனித உருவாக்கம் - அல்லாஹ் படைப்பாளன்
- முதல் மனிதன் படைப்பு (களிமண் - ரூஹ்)
- உடல், அறிவு, ஆன்மா உடையவன்
- அல்லாஹ்வினால் வழிகாட்டப்பட்டவன்
- மனிதன் கண்ணியமானவன் (அல்லாஹ்வின் பிரதிநிதி - கலீபதுல்லாஹ்)
- மனித சமத்துவம் - தக்வாவே அளவீடு
- பொறுப்புக்களைச் சுமந்தவன், மறுமையில் விசாரணைக்கு உட்படுத்தப்படுபவன்
- ஒவ்வொரு ஆன்மாவும் மரணத்தை சுவைத்தே தீரும்
- நன்மையான செயற்பாடுகளுக்கு நற்கூலியும் தீமையான செயற்பாடுகளுக்கு தண்டனையும் அல்லாஹ்வின் விருப்பின் படி கிடைக்கும்
- இபாதத், இமாரத், கிலாபத் பொறுப்புச் சாட்டப்பட்டவன்

**(10 புள்ளிகள்)**

(ii) இஸ்லாமிய சமூகம் ஜாஹிலிய்யா சமூகத்திலிருந்து வேறுபடும் விதத்தைத் தெளிவுபடுத்துக.

| முஸ்லிம் சமூகம் | ஜாஹிலிய்யா சமூகம் |
|---|---|
| - கொள்கை வழி இலட்சிய சமூகம் | - கோத்திர உணர்வை முதன்மைப்படுத்திய சமூகம் |
| - தக்வாவுக்கு முக்கியத்துவம் | - உணர்வுகளுக்கு முக்கியத்துவம் |
| - பொதுத் தலைமைத்துவத்துக்கு கட்டுப் பட்டது | - கோத்திர தலைமைத்துவத்துக்கு கட்டுப் பட்டது |
| - ஹலால் - ஹராம் மற்றும் சட்ட விதிகள் பின்பற்றப்பட்டமை | - சுயநலம் சுரண்டல் மிகைத்துக் காணப்படல் |
| - அல்லாஹ்வினதும் அவனது தூதர் களினதும் செல்வாக்கு மிகைத்திருத்தல் | - மனித விருப்பு வெறுப்புக்களே மிகைத்திருத்தல் |
| - பெண்களின் சமூக அந்தஸ்தும் சொத்து உரிமையும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளமை | - பெண்கள் இரண்டாம் தரப் பிரஜையாகக் கணிக்கப்பட்டமை |
| - பாவங்களைப் பாரதூரமாக கருதுவது. | - பாவத்தை பெரிதாக பொருட்படுத்தாதிருப்பது |
| - சீரான திருமண ஒழுங்கும் குடும்ப கட்டமைப்பும் காணப்படுகின்றமை | - ஒழுங்கீனமான திருமண முறைகளும் குடும்ப கட்டமைப்பும் |
| - ஒழுக்கம், வணக்க வழிபாடு உரிய அந்தஸ்து பெற்றிருத்தல் | - ஒழுக்கம் வணக்க வழிபாடு ஸ்தீர நிலை அற்றது |
| - முழுவாழ்வும் இபாதத்தாக அமைதல் | - தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்குட்பட்ட வாழ்க்கை முறை |
| - அல்லாஹ்விடம் பதில் கூற வேண்டும் என்ற நம்பிக்கையில் வாழ்வை ஒழுங்கு படுத்திக் கொள்ளல் | - அல்லாஹ், மறுமை விசாரணை பற்றிய நம்பிக்கை இன்மை |

**(10 புள்ளிகள்)**

(10 × 2 = 20 புள்ளிகள்)

**வினா இல: (06)**

**6.** (i) சமூக நல்லிணக்கத்துக்கான இஸ்லாத்தின் வழிகாட்டல்களை ஆதாரபூர்வமாகத் தெளிவுபடுத்துக.

- மனித சமத்துவம் வலியுறுத்தப்பட்டுள்ளமை
- மனித நேயம், சகோதரத்துவம் வலியுறுத்தப்பட்டுள்ளமை
- மனிதர்கள் இனங்களாக குழுக்களாக வேறுபடுத்தப்பட்டிருப்பது இயற்கையானதும் அடையாளப் படுத்தலுக்கு உட்படுத்தலுமாகும் என்ற கருத்து
- பொறுமையும் சகிப்புத் தன்மையும்
- நன்மையான விடயங்களில் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ள வேண்டும் என்றும் தீமையான விடயங்களில் ஒருவருக்கொருவர் உதவ வேண்டாம் என்றும் குர்ஆன் முன்வைத்த கட்டளை
- கொள்கைச் சுதந்திரம்
- பிரதி உபகாரம் பாராது ஒருவருக்கொருவர் நன்மை செய்ய வேண்டும் என்ற ஊக்குவிப்பு
- நீதிக்கு முன்னர் அனைவரும் சமம்
- கரைந்து விடாமல் கலந்து வாழ்வது
- பரஸ்பர உதவிகளும் கூட்டுறவுகளும்
- இணைந்த செயற்பாடுகளுக்கான ஊக்குவிப்புக்கள்

போன்றன

**(10 புள்ளிகள்)**

(ii) இலங்கை முஸ்லிம்கள் கண்டி இராச்சியத்தில் வழங்கிய நிர்வாகச் சேவைகளை விபரிக்குக.

- பெத்தா எனப்பட்ட நிர்வாக ஒழுங்கில் முஸ்லிம்கள் பங்கு கொண்டமை
- தூதுவர்களாகப் பணியாற்றியமை
- வைத்தியர்களாகப் பணியாற்றியமை (வெதரால)
- காரணகாரியலாகே (தலதா மாளிகையின் பிரதான அதிகாரி)
- ஹேவபன்ன அல்லது முரபொல பொறுப்புக்கள்
- தலதா மாளிகை அரண்மனைப் பணிகள் (Royal Kitchen - Royal bath)
- கிராமத் தலைவர் முகாந்திரம் பதவிகள்
- சிரிவிக்ரம ராஜசிங்கம் காலத்தில் நீதிபதிப் பதவி

**(10 புள்ளிகள்)**

(10 × 2 = 20 புள்ளிகள்)

**வினா இல: (07)**

**7.** (i) அலி இப்னு ஸீனா மருத்துவத்துறை வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்புகளை விபரிக்குக.

அறிமுகம்

- அவிசென்னா என்ற பெயரால் ஐரோப்பியரால் அறிமுகப்படுத்தப்படல்
- சிறு வயதிலேயே மிகச் சிறந்த வைத்தியர் என புகழப்படல்
- சிறப்புப் பெயர்கள் பல உண்டு - சைகுர் ரயீஸ், இரண்டாம் அரிஸ்டோடில்)
- மருத்துவ நூல்கள் (கானூன் பித் திப்பி, கிதாப் அஸ்ஸிபா)
- பல்துறை சார்ந்த நிபுணராக இருந்தமை (99 நூல்கள் அவற்றில் மருத்துவம் சார்ந்தவை 17)
- பொது வைத்தியராக அறுவை சிகிச்சை நிபுணராக கண்ணோய் நரம்பியல் நிபுணராக பிரகாசித்தமை
- புஹாராவின் ஆட்சியாளரான இரண்டாம் நூஹை குணப்படுத்தியதன் மூலம் சிறப்புபெற்றமை
- இவரது நூல்கள் பல பல்கலைக்கழகங்களில் பாடநூல்களாக பயன்படுத்தப்பட்டமை
- கண்டுபிடிப்பு : உணவுச் சமிபாடு, கண்பார்வை, தொற்று நோய்
- நவீன மருத்துவத்தின் தந்தை என்ற சிறப்புப் பெயர்

**(10 புள்ளிகள்)**

(ii) வரலாற்றுத்துறையில் முஸ்லிம்கள் ஆர்வம் காட்டியமைக்கான காரணிகளைக் குறிப்பிட்டு, அதன் வளர்ச்சியில் அவர்களின் பங்களிப்பை மதிப்பீடு செய்க.

**ஆர்வம்**

- அல்குர்ஆன் வரலாற்றுச் சம்பவங்களை குறிப்பிட்டுள்ளமை
- நபியவர்கள் வரலாற்று நிகழ்வுகளைக் கூறியுள்ளமை
- நபியவர்களின் வாழ்கை வரலாற்றை அறிவதில் ஆர்வம் காட்டியமை
- அறிவைப் பெற்றுக் கொள்வதில் வரலாற்றுக்கு உள்ள முக்கியத்துவம்
- ஹதீஸ்களின் தூய்மையைப் பாதுகாப்பதற்காக தனிப்பட்ட மனிதர்களின் வரலாற்றை ஆராய்ந்தமை
- சாம்ராஜ்ய வியாபகத்தினால் பிரதேச வரலாறுகளைப் படிப்பதில் ஆர்வம் காட்டியமை
- தத்தமது பரம்பரையை அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டியமை

**பங்களிப்புக்கள்**

- வரலாற்றுத் துறை நூல்கள் உருவாகியமை
  ( ஸீறா, மகாஸ், பிரதேச வரலாறு, உலக வரலாறு, பல்துறை வரலாறு ) முதலான உதாரணங்கள் எடுத்துக்காட்டப்படல்)
- காலம் மற்றும் செய்திகள் என்பவற்றின் உண்மைத்தன்மை உறுதிப்படுத்தப்பட்டுள்மை
- காரண காரியங்களுடன் தொடர்புபடுத்தி பக்கச் சார்பின்றி விஞ்ஞான முறைப்படி வரலாறுகளை முன்வைத்துள்ளமை, பெயர் வரிசை பேணப்பட்டுள்ளமை
- வரலாற்றுத் தத்துவம் ஒன்றை உருவாக்கி அதனடியாக வரலாற்று துறையினை வளர்த்தமை

**(10 புள்ளிகள்)**

(10 × 2 = 20 புள்ளிகள்)

**வினா இல: (08)**

**8.** (i) 'ஷீஆ'ப் பிரிவினரின் 'இஸ்மத்' 'இமாமத்' கோட்பாடுகளை விரிவாகப் பரிசீலிக்குக.

**இமாமத்**

- கிலாபத்தை விட இமாமத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தமை
- இமாமை ஏற்றுக்கொள்வது ஈமானில் ஒரு பகுதியாக கருதியமை
- இமாம்கள் அலி (றழி) அவர்களின் வாரிசுகளில் இருந்து வரவேண்டும் என்ற கருத்து
- நபிமார்களை போன்றே இமாம்களையும் மவ்சூம்களாக கருதுகின்றமை
- இமாம்களுக்கு வஹி வருவதாக கருதுகின்றமை
- 12 இமாம்களை ஏற்றுக் கொள்கின்றமை. அவர்களில் 12 ஆவது இமாம் மறைந்து இருப்பதாகவும் மீண்டும் திரும்பி வருவார் என்றும் அத்தோடு அவர் நீதியை நிலைநாட்டுவார் என்றும் நம்பிக்கை கொண்டுள்ளமை

**இஸ்மத்**

- இமாம்கள் பாவங்களில் இருந்து பாதுகாப்புப் பெற்றவர்கள் அல்லது பாவம் செய்யாதவர்கள் என்று நம்புதல்

**(10 புள்ளிகள்)**

(ii) மு.ஃதஸிலா, அஷ்-அரிய்யா சிந்தனைப்பிரிவுகளுக்கிடையே தென்படும் கருத்துவேறுபாடுகளை விபரிக்குக.

| முஃதஸிலா | அஷ் அரிய்யா |
|---|---|
| - தாத்-ஸிபாத் இரண்டும் பிரிக்க முடியாதவை | - தாத்-ஸிபாத் இரண்டும் வேறு பட்டவை |
| - அல்லாஹ்வை இம்மையிலோ மறுமையிலோ பார்க்க முடியாது | - அல்லாஹ்வின் நல்லடியார்கள் மறுமையில் அல்லாஹ்வை கண் களால் பார்க்க முடியும் |
| - அல்குர்ஆன் படைக்கப்பட்டது | - அல்குர்ஆன் படைக்கப்படவில்லை, அது அல்லாஹ்வின் பேச்சு |
| - மனிதன் பூரண செயற் சுதந்திரம் உடையவன் | - மனிதனுக்கு வரையறுக்கப்பட்ட செயற் சுதந்திரம் மட்டுமே உண்டு |
| - பெரும் பாவம் செய்தவன் மு.ஃமி னுக்கும் காபிருக்கும் இடையில் இருப்பான் | - பெரும் பாவம் செய்தவன் பாவி யாவான் அல்லாஹ் நாடினால் மன்னிப்பான் அல்லது தண்டிப்பான் |
| - ஷபாஅத் நல்லடியார்களுக்கு மட் டுமே உண்டு | - ஷபாஅத் முஸ்லிம்கள் அனைவருக்கும் பொதுவானது |
| - நன்மையை ஏவி, தீமையை தடுத்தல் (பர்ழ் ஐன்) | - நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல் (பர்ழ் கிபாயா) |
| - கப்றில் கேள்வி கணக்கு வேதனை கிடையாது | - கப்றில் கேள்வி கணக்கு வேதனை உண்டு |

**(10 புள்ளிகள்)**

(10 × 2 = 20 புள்ளிகள்)